“குடி அரசு” பதிப்பக வெளியீடு 20.

# பர்னாட்ஷா உபந்யாசம்.

இஃது

ரஷியாவைப்பற்றி அமெரிக்கர்களுக்காகச் செய்த

உபந்யாசமாகும்.

குடி அரசு பதிப்பகம், ஈரோடு.

உண்மை விளக்கம் பிரஸ்.

1933

[அணா 1.

ஓம்.

**ராமகிருஷ்ண**

**விவேகானந்தர் சங்கம்**

காரைக்குடி

---

நன்கொடையாளர் ... ஆரு. ஆ. ரு. சொ. சுலிங்கரு ஐயர்.

ஊர் ... காரைக்குடி ...

புத்தக எண் ... 460 ...

பதிவு எண் ... கி. 19 ...

# ஜார்ஜ் பர்னாட்ஷா.

அமெரிக்கர்களுக்காகச் செய்த

# உபந்யாசம்.




குடி அரசு பதிப்பகம், ஈரோடு.

1933

விலை] [அணா 1



# ஜார்ஜ் பர்னுட்ஷா
# ஆகாய வசனி மூலம் அமெரிக்கர்களுக்காகச் செய்த உபந்யாசம்.

——:0:——

நானுபித்தன்?

ஓ எனதன்புள்ள அமெரிக்காவே!
ஓ அமெரிக்க நண்பர்களே!!

என்னை ரஷியப் பித்துப் பிடித்தவன் என்று கூறிக்கொண்டு திரியும் மேதாவிகளே!!!

உங்கள் நாட்டின் தற்கால உண்மை நிலைமையை நீங்கள் சரியாக உணர்ந்திருப்பீர்களேயானால் என்னைப்பற்றி அம்மாதிரி ரஷியப்பித்துக் கொண்டவன் என்று பிதற்றி இருக்கமாட்டீர்கள்.

ரஷியா நம்மைப்பார்த்து சிரிக்கின்றது.

ரஷியா நம்மையெல்லாம் முட்டாள்களாக்கி விட்டது.

அதன் முன்னேற்றத்தில் நம்மைவெகுதூரம் பின்தள்ளி தோற்கடித்து விட்டது.

நம்மை, நாமே, வெட்கித் தலைகுனியும்படியும் செய்து விட்டது.

இவ்வளவோடு நில்லாமல், நமது வண்டவாளங்களை யெல்லாம் உலக மறிய வெளியாக்கி விட்டது.

இனி என்ன் செய்ய வேண்டியது பாக்கியாக இருக்கின்றது? என்று நீங்கள் கருதுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை.

உலகத்தில் நம்மைவிட ஒழுக்கத்தில் சிறந்தவர்கள் கிடையாது என்று மலை உச்சியில் ஏறி ரஷ்யாவுக்கு ஞானோபதேசம் செய்தோம்.

ஆனல் இப்போது அந்தக்காலம் மலையேறி விட்டது. எப்படியெனில் நாம் இன்று ரஷியாவைக் கண்டு நாணி—வெட்கி—மூக்கா

டிட்டுக்கொண்டதுடன் மறைந்து கொள்ள மலைச்சரிவில் புதர்களைத் தேடுகின்றோம்.

## ரஷ்யா நாஸ்திக நாடா?

நாம் ரஷியாவை கடவுள் தன்மையற்ற நாஸ்த்திக தேசம் என்று குற்றம் சாட்டி பரிகசித்தோம்.

ஆனால் இன்று அந்த ரஷ்யாவானது உலகத்தில் உள்ள எல்லாக் கடவுள்களுடையவும் அருளுக்கும், கருணைக்கும் பாத்திரமாகி அவற்றின் அருள் முழுவதையும் தானேபெற்று ஜெகஜ் ஜோதியாய் விளங்குகின்றது.

நாமோ, அக்கடவுள்களின் கோபத்திற்கு ஆளாகி, பிழைக்கவழியற்று, ஒண்டுவதற்கு நிழலில்லாமல் திண்டாடுகின்றோம்.

மனித அபிமானத்தின் மேல் நிலையைப்பெற்று விட்டதாகவும், உலகில்நாமேமிக ஜீவகாருண்யம் உள்ளவர்கள் என்றும், மனிதசமூக நன்மைக்கு வேண்டிய தொழில் முறைகளை யெல்லாம் ஏற்படுத்தியாய் விட்டதென்றும் ஜம்பத்தின் மேல் ஜம்பம் அடித்துக் கொண்டிருந்தோம்.

இதற்காக மக்கள் பட்டினியால் வாடுவதையும், வேலையில்லாமல் திரிவதையும், தெரியாதவர்கள் போல் நடித்து வந்தோம்.

இவற்றின் பயன் எல்லாம் முடிவில் நாம்தான் ஓட்டாண்டி (பாப்பர்) ஆக நேர்ந்தது.

இதைக்கண்ட ரஷியா குதித்துக் குதித்து கெக்கலி கொட்டி சிறிக்க நேர்ந்தது. இவைதான் நமது ஜம்பத்தால் ஏற்பட்ட பயன்.

## உங்கள் தலைவரும் செல்வரும்.

உங்கள் (அமெரிக்கா) நாட்டுக் குடி அரசுத் தலைவரோ "மகா யுத்தகாலத்தில் ஏற்பட்ட நெருக்கடியிலிருந்து மக்களை விடுவித்து, பட்டினிகிடந்து உழலும் ஐரோப்பிய மக்களுக்கு உணவளித்துக் காப்பாற்றியவர்" என்றதான பெரும் புகழைப்பெற்றவர்.

ஆனல் அப்படிப்பட்ட அவர், இன்றுஅவரது (அமெரிக்கா) நாட்டிலேயே பட்டினியால் சாகும் பத்துலட்சக்கணக்கான மக்களுக்கு உயிர்த்தண்ணீர்விடக்கூட மார்க்கமில்லாமல் திண்டாடித்திகைக்க வேண்டியவராய் இருக்கிறார்.

உங்கள் நாட்டுகோடீஸ்வரர்களான செல்வவான்களோ "ஐயோ பணமே கையைவிட்டுப்போகின்றதே" என்று கூப்பாடு போடும் ஓசையானது உலகமெல்லாம் எதிரொலி கிளம்பும்படி செய்வதுடன், இங்கிலாந்திலுள்ள பாங்கிகளையெல்லாம் தீபாவளியாக்கி மூடும்படி செய்துவிட்டது.

## இங்கிலாந்தும், அமெரிக்காவும்.

இதுமாத்திரமல்லாமல் இங்கிலாந்துதேச அரசாங்க நிர்வாக (பட்ஜட்) வரவு செலவு திட்டத்தில் எட்டரைக்கோடி டாலர் (முப்பது கோடி ரூபாய்) போதாமல் துண்டுவிழுந்து கடன்வாங்கித்தீர வேண்டிய நிலைமைக்குகொண்டுவந்துவிட்டது.

இப்படிச்செய்ததின் மூலம் உங்கள் (அமெரிக்கா) தேசமாவது வாழ்ந்ததா என்று பார்த்தால் அப்படியும் இல்லாமல், இந்த வருஷத்திய அமெரிக்க வரவு செலவு (பட்ஜட்) திட்டத்தில், எங்களை (இங்கிலாந்தை) விட, ஐந்து பங்கு அதிகமாய் அதாவது நாற்பத்தி ஐந்து கோடி டாலர் (நூற்றி அறுபது கோடி ரூபாய்) போராமல் துண்டு விழுந்து இருக்கிறது.

எங்களுடைய (இங்கிலாந்து) தேச முதலாளிகள் முப்பது லட்சம் ஜனங்களை தொழில் இல்லாமல் தெருவில் திண்டாடித்திரியும்படி செய்திருக்கிறார்கள்.

உங்களுடைய (அமெரிக்கா) தேச முதலாளிகள் அறுபது லட்சம் பேர்களை தொழில் இல்லாமல் திண்டாடித்தெருவில் திரியும்படி செய்திருக்கிறார்கள்.

இருதேசத்து ராஜதந்திரிகளும் (அரசியல் தலைவர்களும்) பசியால் வாடிக்கூக்குரல் இடுகின்றவர்களைத்தடியால் தாக்கிப்பசியை அடக்கப்பார்க்கின்றார்கள்.

அல்லது அரைவயிற்றுக்குக்கூட போராத அளவு பிச்சை கொடுப்பதுபோல் ஏதோ பிரமாதமாய் தர்மம் செய்வதுபோல் நடித்து நொடித்துக்கொடுக்க யோசிக்கின்றார்கள்.

## நமது விவசாயமும், தொழிலும்.

நமது விவசாயங்களும் நாசமாய்ப்போய்விட்டது.

நமது தொழில் முறைகள் எல்லாம் அளவுக்கு மீறின உற்பத்தியால் மோதுண்டு சிதைந்துபோய்விட்டன. ஏனெனில் அவற்றால் கிடைக்கும் லாபங்களை சரியானபடி பயன்படுத்தாததினால் தாயே பிள்ளையின் கழுத்தை திருகிக்கொன்றதுபோல், லாபமே தொழில்முறையைக் குலைத்துவிட்டன.

ஆகவே, நாமே மிக புத்திசாலிகள் என்று பெருமை பாராட்டிக்கொண்டிருந்த நமது நாடானது, தொழில் திறமை இல்லாமையால் மக்களுக்கு வேலை இல்லாமையும், அரசியல் திறமை இல்லாமையால் வரவு செலவு திட்டத்தில் பணம் போதாமையும், பொருளாதாரத் திறமை இல்லாததால் நாட்டில் பணப்பஞ்சமும் ஆகியவைகளால் அல்லல்படுகின்றது.

## ஆனால் ரஷ்யாவோ,

ஆனால் ரஷியாவோ, அதன் வரவு செலவு திட்டத்தில் ஏழரைக்கோடி டாலர் (இருபத்தி ஆறு கோடி ரூ.) மீதியாக இருக்கவும் அங்குள்ள எல்லா ஆணுக்கும, பெண்ணுக்கும் தாராளமாய் வேலை இருக்கும்படியாகவும், அதன் சாஸ்திரீய விவசாய முறை முற்போக்கானது முன்னிலும் இரண்டு பங்கு, மூன்று பங்கு அதிகமான வெள்ளாமை பலன் கொடுக்கக்கூடியதாகவும், இடரி விழுந்தால் தொழிற்சாலைகளின் மேலேயே விழும்படியான அவ்வளவு எங்கு பார்த்தாலும் தொழிற்சாலை மயமாகவே விளங்கும்படி பெருகவும் நிபுணத்துமான நிர்வாக ஆட்சி செய்யத்தக்க மேதாவிகளும் வேறு எந்த நாகரிக நாட்டிலும் இல்லாத அளவு ஏழை ஜனங்களும்—பாமர ஜனங்களுமாய் இருந்தவர்கள் தங்கள் வாழ்வைப்பற்றி கவலையற்று

நம்பிக்கையும், உறுதியும், ஜவாப்புதாரித்தனமும் கொண்டு நிம்மதியாய் நிர்சிந்தையாய் வாழும் தன்மையும் தாண்டவமாடுகின்றன.

### ரஷ்யா என்ன சொல்லுகிறது?

இந்த நிலைமைகொண்ட ரஷியர்கள் நம்மைப்பார்த்து சிரித்து, பரிதாபப்பட்டு "ஓ வடிகட்டின அடிமுட்டாள்களே" என்று மரியாதைப்பட்டம் கொடுத்து அழைத்து "நீங்கள் ஏன் எங்களைப்பின் பற்றி நாங்கள் நடக்கின்றமாதிரி நடக்கவில்லை? உங்கள் நாட்டு மக்களுக்கு வேலை கொடுக்கவும், சாப்பாடு போடவும், உங்களுக்கு யோக்கியதை இல்லாவிட்டால்—உங்களால் முடியாவிட்டால் (யோக்கியதை இல்லை) அவர்களை எங்களிடம் அனுப்புங்கள். அவர்கள் எந்த வேலைக்குத்தகுதி உடையவர்களோ அந்த வேலையைக்கொடுத்து உணவளித்துக் காப்பாற்றுகின்றோம்.

மற்றும் உங்கள் தேச மக்களைப்பட்டப்பகலில் நடுத்தெருவில் கொள்ளைகள் அடிப்பதில் இருந்தும், கொலைகள் செய்வதில் இருந்தும், தடுத்துக் காப்பாற்ற உங்களால் முடியவில்லையானால் அப்படிப் பட்டவர்களையும், எங்களிடம் அனுப்புங்கள். அவர்களையும் எல்லாம் திருத்தி, நற்புத்தி உண்டாக்கி, அவர்களால் உங்களுக்கு என்றும் எவ்வித தொல்லையும் இல்லாதபடி செய்விக்கின்றோம். ஒரு சமயம் எங்களாலும் அவர்களை திருத்த முடியாவிட்டால் பிறகு அவர்களால் உலகில் எவருக்குமே எவ்வித தொந்திரவும் உண்டாகாதபடி செய்துவிடுவோம்" என்று வீரகர்ச்சனை செய்கின்றது. நாமோ இதற்கு எவ்வித பதிலும் சொல்ல முடியாமல் பேந்தப்பேந்த விழிக்கின்றோம். "இது என்ன புதுமை" என்று ஏங்கி மலைக்கின்றோம்.

### ஆதிகர்த்தர் அமெரிக்கர்களே.

ஆனால் இவற்றையெல்லாம் கண்டும், கேட்டும், மலைப்புற்றிருக்கும் உங்களுக்கு ஒரு ஆறுதல் இருக்கின்றது. அதென்னவென்றால் இன்றைய தினம் ரஷ்யர்கள் செய்யும் இந்த அதிஅற்புதமான மேற்கண்ட செயல்களுக்கெல்லாம் ஆதிகாரணஸ்தர்கள் உங்

கள் அமெரிக்கர்கள்தான் என்பதும், அவர்கள் தான் 50 வருஷங்களுக்கு முன்பே இக்கொள்கைகளை எடுத்துக்காட்டியவர்கள் என்பதும், அதற்காக பல அமெரிக்கர்கள்சிறை சென்று கஷ்டப்பட்டிருக்கிறார்கள் என்பதுமேயாகும்.

## எனது ஞான உதயம்.

நான் ஒரு அமெரிக்கனல்ல. ஆனால் அதைவிட மோசமான ஐரிஷ் தேசத்தவன். எனது சிறுவயதில் ஹென்றி ஜார்ஜ் என்னும் ஒருவரால் ஆச்சரியப்படத்தக்க வண்ணம் என்கண்கள் திறக்கப்பட்டதுடன், அவரது வழியையே பின்பற்றவேண்டும் என்ற எண்ணமும் உதித்தது. அதன் பயனாய் "கார்ல் மார்க்ஸ்" என்னும் ஒரு ஜர்மனி யூதப் பெரியாரைப்பற்றினேன். அதிலிருந்து என் கண்களுக்கு மிகுதியும் அதிகமான பிரகாசம் ஏற்பட்டன. (அதாவது மேற்கண்ட இருவர்களால் எழுதப்பட்ட புஸ்தகங்களைப்படித்துப்பார்த்ததால் இக்கொள்கைகளைப்பற்றிய தெளிவு ஏற்பட்டது என்பது கருத்து மொ-ர்)

இதன் பயனாய் நான் கண்ட உண்மை என்னவென்றால் முதலாளிதத்துவத்தினால் மனிதன் கொஞ்ச காலத்துக்கு செல்வத்தோடு புரளலாம். ஆனாலும் அதற்காக 100க்கு 90 வீதம் எண்ணிக்கையான மக்கள் பயங்கரமான மிகக்கொடிய துக்கத்திற்கும், தலைதூக்க முடியாத தரித்திரத்திற்கும் ஆளாக வேண்டியிருக்கிறது என்பதை மறுக்க முடியாது.

மற்றும் இதன் பயனாய் நாகரீகம்—மனிதத்தன்மை என்பதே அரிதாகி விடுகிறது என்பதையும் நன்றாய் உணர்ந்தேன். பிறகு பதினான்கு வருஷம் கழித்து ருஷிய தேசத்து Oulianoff ஒளலியனாவ்ப் என்ற மறு பெயர் கொண்ட லெனின் என்பவர் என்னைப்போலவே அதாவது மார்க்சினுடைய நூல்களைப் பயின்றார்.

## மகாயுத்தத்தின் பலன்.

1914ம் வருஷத்தில் எங்கள் ஏகாதிபத்திய அரசாங்கங்கள் என்னை ஒரு பெரிய யுத்தத்தில் இழுத்து விட்டன. ஆனால் நீங்க

ளோ வெகு ஜாக்கிரதையாகத் தப்பித்துக்கொள்ளப்பார்த்தீர்கள். என்ன செய்தும் நீங்களும் யுத்தத்தில் கலந்து தீரவேண்டிய நிர்ப் பந்தம் வந்து சேர்ந்து விட்டது.

ஆகவே யுத்தத்தில் கலந்தீர்கள், அதற்காக நன்றி செலுத்து கிறேன். கடைசியாக அந்த யுத்தமானது மேற் குறிப்பிட்ட மூன்று ஏகாதிபத்தியங்களும் எந்த உள் எண்ணத்தைக் கொண்டு உலக மக்களை யுத்தத்தில் இழுத்து விட்டனவோ அதற்கு நேர்மா ரான பயனையே அடைய நேர்ந்தது. அதாவது உலகத்தைக் கொ ள்ளை கொள்ள நினைத்துத் தொடங்கிய யுத்தமானது அம்மூன்று ஏகாதிபத்தியங்களையுமே அந்த யுத்தம் கொள்ளை கொள்ள வேண்டி யதாய் விட்டது. மற்றும்,

முடி அரசாய் வெகு காலம் விளங்கி வந்த ஐரோப்பா தேசம் இன்று குடி அரசு மயமாய் விளங்க நேரிட்டது.

ஐரோப்பிய ஐக்கிய நாடுகளைவிட பெரியதாய்இருந்தஒரே ஒரு முடியரசை-தனிப்பெரும் வல்லரசை (ரஷியாவை) பொது உடமைக் கொள்கையை ஏற்ற குடி அரசு கொண்ட ஐக்கிய நாடாக (Federation of Communist Republic ஆய்) செய்து விட்டது. இது நீங்கள் ஒரு நாளும் எதிர்பாராத காரியம் அல்ல வா ?

இன்று அங்கு, எங்கு பார்த்தாலும் கார்ல் மார்க்ஸ் வாழ்க !
உலக தொழிலாளிகளே ஒன்று சேருங்கள் !!
உலக ஏழை மக்களே ஒன்று சேருங்கள் !!!
ஏகாதிபத்தியங்களைக் கவிழ்த்துங்கள் !!!!

என்ற ஆனந்தக் கூச்சலே வானமளாவக் கிளப்பவா உங்கள் மக்களை யுத்த பீடத்திற்கு அனுப்பி பலிகொடுத்தீர்கள் ?

## மகாயுத்தம் பெற்ற குழந்தை.

எப்படியோ மகாயுத்தத்தின் பயனாய் உங்கள் வாலிப மக்கள் சிந்திய இரத்தத்திலிருந்தும், உலக சமாதானத்திற்கென்று நீங்

கள் செலவழித்த பணத்திலிருந்தும், பிறந்த குழந்தை, தான் இந்த அபேதவாத சமதர்ம பஞ்சாயத்து குடியரசாகும். (U. S. S. R.) இந்த விபரீதத்தை நீங்கள் எதிர்பார்க்கவில்லையானாலும், இதற்குத் தகுந்த சன்மானம் இது தான் என்று கடவுள் தீர்மானித்து விட்டார். அதை அடைந்தும் ஆய்விட்டது. ஆகவே அதை நேர்மையான—நன்மையான முறையில் பயன்படுத்திக் கொள்வது தான் இனி புத்திசாலித்தனமாகும்.

வல்லரசுகளுக்கும், மகா யுத்தத்திற்கும் பிறந்த குழந்தையாகிய ரஷிய அபேத வாத தேசத்தின் வியாபாரம் பெருகி ஓங்கவும், நீங்களும் (அமெரிக்காவும்) இங்கிலாந்தும், பிரான்சு தேசமும் பிள்ளைப் பேருக்கு ஏற்பட்ட (யுத்தக் கடன்) கடனை அடைக்க முடியாமல் திண்டாடிக்கொண்டுமிருக்கையில் நான் கூறுவது செவிடன் காதில் சங்கூதுவது போல்தான் முடியும் என்பது எனக்குத்தெரியும்.

ஆனல் நான் இப்போது மாத்திரம் இதைச் சொல்லி உங்களைப் பரிகாசம் செய்பவரவில்லை. அந்தக் காலத்திலேயே அதாவது மகாயுத்த காலத்திலேயே, 1914ம் வருஷத்திலேயே சொன்னது உங்களில் பலருக்கு ஞாபகமிருக்கலாம். என்ன சொன்னேன்?

எனது யோசனையைக்கேட்காதவர்கள் அடைந்தபலன்.

"இருதரப்பு சேனைகளுக்கும் சிறிதாவது பகுத்தறிவு இருக்குமானல், தங்கள், மேல் அதிகாரிகள் கட்டளை இடுகிறர்கள் என்பதற்காக ஒருவரை ஒருவர் சுட்டு வீழ்த்திக் கொள்ளுவதற்கு பதிலாக, அவரவர்கள் வீடுகளுக்குச்சேன்று தங்கள் தங்கள் காரியங்களை கவனிப்பார்களாக."

என்று சொன்னேன், அந்த சமயத்தில் உங்களில் பலர் என் மீது எறிந்து விழுந்தார்கள்.

"தேசியத்திற்கும் பகுத்தறிவுக்கும் என்ன சம்பந்தம்?"

என்றுபலர் கேட்டார்கள்அதாவது "புகழுக்காகவும், தேச பக்திக்காகவும் செய்யப்படும் யுத்தத்தை பகுத்தறிவுக் கண்கொண்டு பார்ப்பது ஒழுங்காகாது" என்று கடிந்தார்கள்.

பிரிட்டிஷ் சிப்பாய்கள் பகுத்தறிவில்லாமல் மக்களைச் சுட்டுக் கொன்று கொண்டே இருந்தார்கள். பிரஞ்சு சிப்பாய்கள் புத்தி இல்லாமல் தங்களின் வீரத்தை கொளுத்து விட்டெரியக் காட்டிக் கொண்டே இருந்தார்கள். ஜர்மனி சிப்பாய்களும், ஆஸ்டிரியா சிப்பாய்களும் மேற்கண்டவர்களைப் போலவே முட்டாள் தனமாய் நடந்து கொண்டார்கள். இத்தாலிய படையும் இதில் சேர்ந்து கொண்டது. அமெரிககசிப்பாய்களோ உடனேகூட்டத்தில் கலந்துகொள்ள ஆத்திரப்பட்டார்கள். துடித்துக்கொண்டிருந்தார்கள். இவர்களில் அமெரிக்க சோல்ஜர்களே அடி முட்டாள்களாய் இருந்தார்கள்.

எனது வார்த்தையைக்கேட்டவர்கள் அடைந்தபலன்.

ஆனல் 1917ம் வருஷத்தில் ஒரு அற்புத நிகழ்ச்சி ஏற்பட்டது. அது என்ன வென்றால், ரஷிய சேனு வீரர்கள் மாத்திரமே எனது வார்த்தைகளை உற்றுக் கேட்டார்கள்-மதித்தார்கள். உடனே "பட முடியாது இனித்துயரம் பட்ட தெல்லாம் போதும் போதும்" என க்கூவிக் கொண்டு போர்க்களத்தைவிட்டு நேரே தங்கள் தங்கள் வீடுபோய்ச் சேர்ந்தார்கள்.

உடனே தொழிலாளிகளும் சிப்பாய்களுமாய்க் கூடி ஒன்று சேர்ந்து ஸ்தாபனங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். அதற்கு பஞ்சாயத்து ஆக்ஷி என்று பெயரிட்டார்கள், "எல்லா அதிகாரங்களும் அதன் ஆட்சிக்கு வர வேண்டும்" என்று விளம்பரப் படுத்தினர்கள். இதன் பயனுய் கொடுங்கோலரசு செய்து வந்த ருஷிய சக்கர வர்த்தியின் (ஸார்) பயங்கர ஆக்ஷியானது மணல் வீடு சரிவது போல சர சர வென சரிந்து, சிதைந்தொழிந்தது.

லெனின் தோற்றம்.

இங்கிலேயில், தக்க தலைவர்களும்,தக்கபடி திருத்தி அமைக்கப் பட்ட ஒரு நிர்வாகத்திட்டமும் இல்லாமல் மேலால் ஒன்றும் செய்ய முடியாமல் அவர்கள் தயங்கி கொண்டிருந்தார்கள். இந்த நிலையானது எனது கொள்கைகளையே பின்பற்றினவரும், கார்ல்மார்க்சினு

டைய உபதேச புத்தகங்களைப் படித்துக் கரை கண்டவருமான லெனினுக்கும் அவரது நண்பர்களுக்கும் அருமையான ஒரு சந்தர்ப்பம் போல் ஆயிற்று. அவர்கள் வெகு தைரியமாய் அக்கூட்டத்தில் (சோவியத் கூட்டத்தில்) குதித்து அதன் தலைமை ஸ்தானத்தையும் ஏற்றார்கள்.

141 வருஷங்களுக்கு முன்னால் வாஷிங்டன் Washington, ஜப்பர்சன் Jefferson, ஹாமில்டன் Hamilton, பிரான்க்லின். Franklin, டாம்பெயின் Tompain, ஆகியவர்கள் எவ்வாறு அமெரிக்காவில் ஐக்கிய நாடுகளை நிலை நிறுத்தினர்களோ அது போல் இவர்கள் (அதாவது லெனினும் அவரது நண்பர்களும்) ரஷியாவை சமதர்மப் பஞ்சாயத்து குடிஅரசு ஐக்கிய நாடாக ஆக்கினார்கள்.

அமெரிக்காவுக்கும், ரஷியாவுக்கும்
ஒப்பு உவமை போட்டிப் பரிசு.

அமெரிக்காவுக்கும்-ரஷியாவுக்கும் இம்மாதிரியான ஒப்புவமை ஏற்படுத்துவதில் உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருக்குமானால் நீங்கள் தயவு செய்து உங்களுடைய ஓய்வு நேரங்களில் அமெரிக்க பழைய தீவிரப்பத்திரிகைப் பிரதிகளைப் புரட்டிப்பாருங்கள்.

18வது நூற்றாண்டின் பிற்பகுதியில் அமரிக்கரும் பிரிட்டிஷாரும் வெளியிட்ட அரசியல் துண்டுப் பிரசுரங்களையும் பத்திரிகைகளையும் தேடிப்பிடித்து எடுத்து அவற்றில்உள்ள தேதிகளையும், தேசப்பெயர்களையும், தலைவர்களின் பெயர்களையும் அழித்துஎடுத்துவிட்டு, அதை ஒரு பரிசு போட்டியாகச் செய்து, உங்கள் நண்பர்களிடம் கொடுத்து நீங்கள் அழித்து எடுத்துவிட்ட அந்த காலி இடத்தைமறுபடியும் பூர்த்தி செய்யும்படி சொல்லிப்பாருங்கள். அவர்கள் நீங்கள் அழித்து விட்ட தேதி ஊர் பெயர்கள் ஆகிய இடங்களில், அமெரிக்காவுக்குப் பதிலாக ரஷியா என்றும், 18ம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பதற்கு பதிலாக 20-வது நூற்றாண்டு முற்பகுதி என்றும், வாஷிங்டனுக்கு பதிலாக ட்ராட்ஸ்கியின் பெயரையும், ஜாப்பரி

சனுக்கு பதிலாக லெனின் பெயரையும், பிரான்க்லின் பெயருக்கு பதிலாக விட்விஞப்பையும், பெய்ஞருக்கு பதிலாக லூஞசார்ஸ்க்கி பெயரையும், ஹாமில்டனுக்கு பதிலாக ஸ்டாலின் பெயரையுமே தான் எழுதி அந்த காலி இடங்களைபூர்த்தி செய்து கொடுத்து பரிசு பெற வருவார்கள்.

இந்த உண்மையை அப்போட்டிப் பரிசுக்கு வந்தவர்களிடம் சொல்லுவீர்களாஞல் அவர்கள் வாய்திறக்கவே மாட்டார்கள், ஆச்சரியப் படுவார்கள். ஆஞல் நீங்கள் அவர்களுக்கு ஒரு சிறந்த நற்போதனை செய்தவர்களாவீர்கள்.

நேற்று வாஷிங்டன், நாளை லெனின்.

நேற்று லண்டன் நகரில் வாஷிங்டனுடைய உருவச் சிலை நாட்டப்பட்டிருக்கிறது. ஆஞல் நாளைக்கோ மனிதர்களின் துர்போதனைகளையும், எண்ணங்களையுமெல்லாம் எதிர்த்து வந்த லெனினுடைய உருவச்சிலையானது நியூ யார்க் பட்டணத்தில் நாட்டப்படும். இந்த மத்தியில் நீங்கள் மேற்கண்ட பழைய பத்திரிக்கைகளைப்பற்றி நடத்திய போட்டிப்பந்தயத்தை முடித்துவிட வேண்டும்.

18 வது நூற்றுண்டில் அமேரிக்கா,
20 வது நூற்றுண்டில் ரஷியா.

அன்றியும் "நாஸ்திகர்களும் குடிகாரர்களும், துன்மார்க்கர்களும், கள்வர்களும், கயவர்களுமான பஞ்சமா பாதகர்கள் என்பவர்கள் சேர்ந்த ஒரு கூட்டத்தாரால்தூண்டப்பட்டு, சமூக நல்வாழ்க்கை சம்மந்தமான சகல கட்டுப்பாடுகளையும் அறுத்து, அராஜகத்திற்கும் அகௌரவத்திற்கும் ஆளாய்விட்டதாக தூற்றப்பட்ட தேசம் எது?" என்றுல் 18-வது நூற்றுண்டில் அமெரிக்காவும், 20வது நூற்றுண்டில் ரஷியாவும் என்றுதான் அக்கொள்கையின் விரோதிகள் சொல்லுவார்கள். ஆஞல் அவர்களிடம் இதன் உண்மை இன்னது என்பதை எடுத்துச்சொல்லி விட்டால் பிறகு உங்கள் ஜோலிக்கு வரமாட்டார்கள்.

இன்று லண்டன் பட்டணத்தில் வாஷிங்டனின் உருவச்சிலை ஒன்று விளங்குகின்றது. ஆனால் நாளை அமெரிக்காவில் லெனின் உருவச்சிலை ஒன்று விளங்கப்போவது உறுதி! உறுதி !!

நான் ரஷியாவில் கண்ட காக்ஷி.

நிற்க, நான் ரஷியாவுக்குச் சென்று வந்ததின் பயனாய் அங்குள்ளகாட்சி என்ன என்றும், அதுபற்றி நான் கொண்ட கருத்து என்ன என்றும் அறிய ஆசைப்படுவீர்கள். ஏனெனில் இப்படி ஆசைப்படுவது அமெரிக்கரின் சுபாவம்.

ஆகவே நான் ரஷியாவில் முதல் முதல் கண்ட காட்சி என்ன வென்றால், ரஷியாவில் எங்கு பார்த்தாலும் அமெரிக்கர்கள் தாராளமாய் காணப்பட்டார்கள்.

இரண்டாவதாகக் கண்ட காட்சி என்ன வென்றால், ரஷியாவின் அறிவாளிகள் ஒவ்வொருவரும் அநேகமாய் அமெரிக்காவைப் போய்ப்பார்த்து வந்திருப்பதும், அங்கு இருந்தகாலத்தில் அவர்களுக்குச் சிறிதும் சுதந்திரம் இல்லாமலிருந்ததால் அதை வெறுக்கின்றதையும் பார்த்தேன்.

அன்றியும் தாங்கள் இங்கிலீஷ் பேசுவதாக நினைத்துக்கொண்டு பேசும் ரஷியர்கள் ஒவ்வொருவரும் அமரிக்கபாஷையைப் பேசுவதையே பார்த்தேன், அதாவது ரஷியர்களின் இங்கிலீஷானது அமெரிக்கர்கள் பேசும் இங்கிலீஷ் போலவே இருந்தது. இதர ஐரோப்பியர்களும் இவ்விதம்தான் நடந்து கொள்ளுகிறார்கள். அதாவது அவர்கள் பேசும் ஆங்கிலபாஷைகள் இப்படித்தான் இருக்கின்றன. நான் ரஷியாவுக்கு சென்று திரும்பும் பொழுது பிரான்ஸ், ஜெர்மனி, பெல்ஜியம், போலண்டு முதலிய தேசங்களின் வழியே பிரயாணம் செய்தேன். இந்த ஒவ்வொரு தேசங்களிலும் நான் உத்தியோக தோரணையில் ஆடம்பரமாக வரவேற்கப்பட்டேன். ஆனால் ஒவ்வொரு தேசத்திலும் அமெரிக்கர்களே எல்லோருக்கும் முன்பாக வந்து அமெரிக்கர் என்கின்ற முறையில் என்னை வரவேற்பதாக சொன்னார்கள்.

## எங்கும் அமேரிக்கர்களே.

ஆகவே எங்கு பார்த்தாலும் அமெரிக்கர்கள் இவ்வளவு செல்வாக்காய் இருப்பதற்கு இதுவே காரணமாகும்.

நீங்கள் எங்கு சென்ருலும் அங்கெல்லாம் உங்கள் சொந்த நாட்டில் இருப்பது போலவே நடந்து கொள்ளுகிறீர்கள்.

அங்கங்கு என்னை வரவேற்க முன்வந்த அந்தந்த நாட்டுப் பிரமுகர்களான சுதேச மன்னர், அரசாங்கதலைவர், மந்திரிமார்கள், பிரதம பாதிரிகள், உயர்தர கல்வி ஸ்தாபனங்களின் தலைவர்கள் முதலிய எல்லோருமே சிறிது காலத்திற்கு முன் அந்தந்த நாடுகளுக்குச் சென்ற அமெரிக்கர்களாகவே இருந்ததானது எனக்குமிகுதியும், சந்தோஷமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. இதைப்பற்றி நான் குற்றம் கூற முன் வர வில்லை. ஆனல் அதைக் கண்டு நான்திருப்தியும் மகிழ்ச்சியும்அடைகிறேன்.

இறக, நீங்கள் முன் சென்ற அமெரிக்கர்களுடன் சேர்ந்து கொள்ளரஷியாவுக்கு போவதாயிருந்தால் நான் எனது அனுபோகங்களில் சிலவற்றை உங்களுக்குச் சொல்லுகின்றேன். அவைகள் உண்மை தான என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளக்கூடும்.

## நீங்கள் ரஷியாவுக்கு போவதானல்,

நீங்கள் நல்ல ஒரு உழைப்பாளியாகவும், யந்திரத்தொழிலில் தேர்ச்சி பெற்றவர்களாகவும், தகுந்த பருவமும்நல்ல குணமும் ஒழுக்கமும் உடையவர்களாயும் (ஏனென்ருல் ஒழுக்கத்தைப்பற்றி ரஷ்யர்களுக்குமிகவும் கவலைஉண்டு.) இருந்தால் உங்களுக்கு எவ்வித கஷ்டமும் இருக்காது. அவர்கள் உங்களை வரவேற்பதற்கு மிகுதியும் மகிழ்ச்சியே யடைவார்கள்.

எல்லா தேசத்திய உண்மை உழைப்பாளிகளையும் நன்ருய் வரவேற்க ரஷியர்கள் ஆவலாகவேஇருக்கிறார்கள்.

நீங்கள் வெறும் பணக்காரர்களாய் மாத்திரம் இருந்து வேறு ஒரு காரியத்திற்கும் உதவா சோம்பேரிகளாய் இருந்தாலும் கூட

உங்களுடைய பணங்களை எல்லாம் ரஷியாவிலேயே செலவிடும்படி யாய் செய்து உங்களுக்கு வேண்டிய சகல சௌக்கியங்களையும் செய்து கொடுப்பார்கள். நீங்கள் தினம் 1க்கு 15 ரூபாயாவது செலவு செய்தாக வேண்டும். நீங்கள் மிகவும் லோபித்தனமாய் இரு ந்து நாள் ஒன்று 15 ரூபாயிக்கு குறைவாக செலவு செய்தால் நீங் கள் அங்கு இருந்து திரும்புவதற்கு முன்னதாகவே அந்த வித்தி யாசத்தை செலுத்தும்படி செய்து விடுவார்கள். ஆகையால் அங்கு சென்ற பிறகு அவர்கள் குறிப்பிட்ட தொகைக்கு குறைவாய் செலவு செய்யப் பார்ப்பதில் ஒன்றும் பலன் ஏற்படாது என்பதோடு உங் களை மரியாதையாகவும் நடத்த மாட்டார்கள். அமெரிக்கப் பெண் ணாய் இருந்தாலும் கூடசிறிதாவது லோபமாய் இருந்தால் மதிக்கவே மாட்டார்கள்.

## உங்களிடம் வெறுப்பும், பரிதாபமும் அடைவார்கள்.

நீங்கள் ரஷியாவுக்கு சென்றால் அவர்கள் உங்களை சிறிதுவெறு ப்புடனும், மிகபரிதாபத்துடனுந்தான் பார்ப்பார்கள். ஏனென்றால் நீங்கள் உங்கள் நாட்டில் பொதுவுடைமைக் கொள்கையைப்பரப்ப முயற்சித்துப் புரட்சி செய்யாததால் வெறுப்பும், சுதந்திரமும், பொ துவுடைமைக்கொள்கையும், இல்லாத ஒரு அடிமை தேசத்தில் இரு ந்து வாழ இஷ்டப்படாமல் தங்களிடம் அடைக்கலம் புக வந்திருப் பதற்காக இரக்கமும், அனுதாபமும், கொள்ளுவார்கள். தன் இனத் தைவிட்டுத்தப்பிப்பிரிந்து உணவுக்கு அலையும் ஒரு குரங்கினிடம் அன்பாகவும், நேசமாகவும், இருப்பதுபோல் உங்களிடம் இருப்பார் கள். ஆனால் எதுவும், நீங்கள் அங்கு நடந்துகொள்ளும் நடவடிக் கையைப்பொருத்து இருக்கின்றது என்பதை மறந்துவிடாதீர்கள். நீங்கள் ஒழுங்காய் நடந்துகொண்டால் உங்களை அவர்கள் அந்தரங்க நண்பர்கள் போலபாவித்து அவ்விடத்திய வாழ்க்கையின் சகல துறைகளையும், உங்களுக்கு வெளிப்படையாக காட்டுவார்கள். உங் களைப்போல் அவர்களுக்கு குழந்தை குட்டிகள் தொல்லே, வரி, வட்டி வாடகைமுதலியவைகளைப்பற்றிய கவலேசிறிதும் கிடையாது. ஆத

லால் உங்களுடன் நேசமாய், சமசுதந்திரமாய் வாழ்க்கைநடத்து வதில் அவர்களுக்கு சிறிதும் கஷ்டம் இருக்கவியாயமில்லை.

அவர்கள் தங்கள் பொதுவுடைமைக்கொள்கை வாழ்க்கையைப் பற்றி மிகவும் திருப்தியும், பெருமையும், கொண்டிருப்பதால் அவற்றின் சகல ஸ்தாபனங்களையும், அவற்றின் நடப்புகளையும், உங்களுக்கு காட்டுவதைப்பற்றியும், விளக்குவதைப்பற்றியும், மகிழ்ச்சியுடனும், ஆவலுடனும், முன்வருவார்கள்.

## நீங்கள் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்.

ஆனால், நீங்கள் மாத்திரம் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மனுஷ சுபாவம் என்பது இங்குள்ளது போலவே ரஷியாவிலும் இருக்கும் என்று எண்ணிவிடாதீர்கள்.

உங்கள் (அமெரிக்கா) அம்பாசிடர் (Dawes) தால், என்னிடம் ஒரு நாள் பேசிக்கொண்டிருந்த போது "உங்களுடைய ஸ்தாபனங்களை எப்படி மாற்றியமைத்த போதிலும், உங்களுடைய மனித இயற்கைத் தன்மையை மாற்றி அமைக்க முடியாது" என்றுசொன்னார். ஆகவே நீங்கள் ரஷியாவிற்கு செல்லு முன் மனித சுபாவத்தைப்பற்றி விஞ்ஞான முறைப்படி (இயற்கை அமைப்புப்படி) நன்றாய் அறிந்து கொள்ள வேண்டும்.

மனித சுபாபத்தை கற்றுக்கொள்வது என்பது சுலபமான காரியம் அல்லவானாலும், அது மாறுபடக் கூடியதல்லவானாலும், ஒரு அளவுக்கு அறிந்தாக வேண்டும், அதாவது ஒரு களிமண்ணின் இயற்கைத் தன்மை சுலபத்தில் மாற்ற முடியாது. ஆனால் அக்களிமண்ணைக் கொண்டு செய்யப்படுகின்ற சாமான்கள் விஷயத்தில் நம் இஷ்டம் போல் எப்படிப்பட்ட சாமான்கள் வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். களிமண்ணின் முக்கியதன்மை எங்கும் ஒன்று போலவே இருந்தாலும், பூசாரத்தில், அதன்இயற்கை கூட்டால் சில இடத்துமண் சற்று மிருதுவாகவும், சிலது கெட்டியாகவும் இருக்கலாம். அது போல மக்கள் சுபாவம் எங்கும் ஒன்று போலவே இருந்தாலும், அமரிக்க மக்கள் சுபாவத்திற்கும், ரஷிய மக்கள் சுபாவத்

திற்கும், சிற்சில விஷயங்களில் சிறிது வித்தியாசம்காணப்படலாம். இவையெல்லாம் அவனவனுடைய சுபாவம், பழக்கம், வழக்கம் முதலியவைகளைப் பொருத்து இருக்கிறதேதவிர வேறில்லை.

எப்படி யெனில் அமெரிக்காவில் பெருமையாகவும், ஆனந்தப் படக் கூடியதாகவும், கருதும்படியான ஒருகாரியம் ரஷியாவில் இழிவான குற்றமாகக்கருதக் கூடியதாய் இருக்கும்.

அமெரிக்காவில் புகழ்க்குறியது, ரஷியாவில்
தண்டனைக் குறியதாகும்.

உதாரணமாக ஒரு அமெரிக்கன்ரஷியாவைப் பார்த்து அதைப் பற்றி நினைக்கும்போது ரஷியா தேசமானது சகல வளப்பங்களும் இயற்கையிலேயே பெற்று இருக்கும் தேசமாகவும், பணம் சேர்த்து கோடீஸ்வரனுவதற்கு மிகுந்த தகுதியுள்ள தேசமாகவும்,தோன்றும். மற்றும் நாணயமாற்றைப் பார்த்தவுடன் பணத்தை குவித்து விடலாம் என்று ஆசை உண்டாகும். மேலும் "கூலியோ மிகசொற்பம், இலாபமோ மிக அதிகம் இவ்வளவு லாபமும் ஒரு மனிதன் அந்தத் தொழிலை நடத்தி தன் சொந்த பணக்காரனுகாமல் சர்க்கார் அடைந்து வீணுக்கப் படுகின்றதே! வீணுகஇவ்வளவு லாபத்தையும் பொது ஜனங்களுக்காகச் செலவு செய்து விடுவதில் என்ன பலன் இருக்கிறது? வியாபார முறையும், பணம் சேர்க்கும் தன்மையும் இல்லாமல் போகின்றதே." என்று வருத்தப்படுவான். எதைப் போல் என்ருல் ஒரு காலத்தில் அமெரிக்க பொருளாதார வாதி ஒருவர் சொன்ன மாதிரியாக "பொது ஜனங்களைக் குப்பையில் தள்ளுங்கள். ஒவ்வொரு மனிதனும் அவனவன் காரியத்தில் கண்ணுயிருந்தால் தான் பணம் சேருமே ஒழிய பொதுநலம், பொதுக் காரியம் என்று கருதினுல் பணம்சேரவே சேராது" என்று சொன்னுர். அப்படித்தான்எல்லா அமெரிக்கனும் நினைப்பான்.

பணம் சேர்க்க நினைத்தால், மேல் உலகம் போவீர்கள்.

இந்த முறையை நீங்கள் ரஷ்யாவில் கையாண்டீர்களானுல் நீங்களும் வெகு சீக்கிரத்தில் பணக்காரர்களாகலாம். ஆனுல் இந்த

விஷயங்கள் அந்த நாட்டு வருமானவரி அதிகாரிகள் காதுகளுக்கு எட்டி விடுமேயானல், உடனே ரகசியப் போலீசை விட்டு, நீங்கள் பணம் சேர்த்த வழியையும், முறையையும் நன்ருய் விசாரித்துத் துப்பு அறிந்து அறிக்கை அனுப்பச் சொல்லுவார்கள். பிறகு ஒரு ஆசாமி வந்து உங்கள் பிடனியில் ஒரு அறை கொடுத்துத் தள்ளிக் கொண்டு போய்,ஒரு பெயர் பெற்றகடினமானகுற்றவிசாரணை ஸ்தலத்தில் நிறுத்துவான். அங்கு வியாபார முறையையும், மனித சமூக வாழ்க்கையைப்பற்றிய உங்கள் கொள்கைகளையும், அபிப்பிராயங்களையும்விளக்கும்படி கேட்பார்கள்.

அது சமயம் உங்களது அமெரிக்க வர்த்தக முறைகளைப் பற்றியும், தனி நன்மையைப் பற்றியும், சுயநலத்தின் நற்பயன்களைப் பற்றியும், எவ்வளவு உங்களால் அனுசரித்து பேசி நிலை நிறுத்த முடியுமோ அவ்வளவையும் பேச விடுவார்கள். உங்களை யாதொரு குறுக்கு விசாரணையும் செய்ய மாட்டார்கள், அவமதிக்கவு மாட்டார்கள், யாதொரு தொந்தரவையும் கொடுக்க மாட்டார்கள். நீங்கள் எல்லாவற்றையும் சொல்லி முடித்தவுடனே, மறு உலகம் என்று ஒரு உலகம் இருந்தால் அதைக்காணுவீர்கள். அப்படி ஒரு உலகம் இல்லாவிட்டால், உங்களுடைய, இவ்வுலக வாழ்வானது முடிவடைந்த பேற்றை பெருவீர்கள். மற்றும் அவர்கள் உங்கள் சுற்றத்தாருக்கு உங்களைப் பற்றி இனிமேல் யாதொரு கவலையும் படவேண்டா மென்றும், மறுபடியும் நீங்கள் திரும்பி வீடு வந்து சேரமாட்டீர் என்று மிகவும் வணக்கமாகவும் மரியாதையாகவும், ஒரு கடிதம் எழுதி தெரிவித்து விடுவார்கள்.

## பேதைகள் (பணக்காரர்கள்)
## இருப்பதைவிட இறப்பதே மேல்.

இதை ஒரு தண்டனை என்ருே,அல்லது சட்டப்படி தீர்மானிக்கப்பட்ட ஒரு குற்றமென்ருே நீங்கள் கொஞ்சமும் நினைக்கவேண்டாம். ருஷிய மக்கள் "பேதைகள் இருப்பதை விட இறப்பதே

மேல்" என்று நினைக்க உருவெடுத்தவர்களாவார்கள். பேதை (Idiot) என்னும் பதத்திற்கு (கிரீக் பாஷையில்) தன்னையன்றி, மற்றவர்களைப்பற்றிகவலைப்படாதவன் எனப்பொருள் உண்டு. ஆகவே உங்களது வாழ்க்கையின் நோக்கங்களானது உங்களை பேதைகளென்று சொல்லுவதற்குப்போதுமான ஆதாரம் ரஷியர்களுக்கு இருக்கிறது. உங்கள் மேலும், உங்கள் சமூகத்தின் மேலும் இருக்கும் பரிதாபத்தால் தான் உங்களுக்கு யாதொருதொந்தரவையும் கொடுக்காமல், உங்களை இவ்வுலகிலிருந்து பிரித்து விடுவார்கள்.

## மனிதன் எதற்காக வாழ வேண்டும்?

நான் அனேக வருஷங்களுக்கு முன் சொன்ன ஒரு யோசனையைத்தான் அவர்கள் (ரஷ்யர்கள்) இப்பொழுது நிறைவேற்றுகிறார்களே ஒழிய புதிது ஒன்றும் இல்லை. நாகரீக மடைந்த சமூகத்தில் பிழைக்கும் ஒவ்வொரு மனிதனும், அச்சமூகத்தின் ஆதரவையும், நன்மைகளையும் குழந்தைப் பருவம் முதல் அனுபவித்து வந்த ஒவ்வொருவனும், தான் இனி இவ்வுலகில் வாழ்வதால்அச்சமூகத்திற்கு என்ன பயன் உண்டு என்பதை, ஒருநீதிபதி முன் எடுத்துக் காட்டுவதன் மூலம் மக்களை திருப்தி செய்பவனாய் இருக்க வேண்டும். அப்படி அவர்களை திருப்தி செய்ய முடியாவிட்டால், அச்சமூகத்திற்குத் தொந்தரவையும் இடைஞ்சலையும் கொடுக்காமலாவது இருக்க இவ்வுலகிலிருந்து பிரிந்தாவது விட வேண்டும். ஒரு நாட்டுக்குபொறுப்பும், உத்திரவாதமும் உள்ள மக்களை உண்டாக்க இதைவிட வேறு வழியில்லை. ரஷிய பொதுவுடமைச் சங்கங்கள் இவ்வளவு வெற்றி பெற்றிருப்பதற்குக் காரணம், ஒவ்வொரு ரஷியனும் தன் வாழ்க்கையினால் தன் தேசத்தவனுக்குதக்க நன்மையை உண்டாக்கா விட்டால், தான் உயிரையேஇழக்க நேரிடும் என்று நன்றாய் அறிந்ததேயாகும்.

ஆகவே இப்படிப்பட்ட இன்றியமையாததான ஓர் சீர்திருத்தக் கொள்கையை உங்கள் முன் எடுத்துச சொல்லி, அதை வற்புறுத்திப்

பேச நேர்ந்ததை நான் ஒரு பெருமையாய் கருதுகிறேன். ஒரு நந்தவனம் நன்ருய் வைத்திருக்கப்படவேண்டுமானுல் அது நன்ருய் களை எடுக்கப்படவேண்டும். ஆகையால் நீங்கள் ஜாக்கிரதையாய் இருங்கள்.

## கடுந்தண்டனை இல்லை.

உங்கள் ஆத்திரத்தின் பயனுப் ஏதாவது குற்றம் செய்ய நேர்ந்து விட்டால் அதற்காக உங்களை மிருகத்தனமாய் நடத்திவிட மாட்டார்கள். உங்களது இயற்கை குணத்தின் பயனுல் ஒருவனை நீங்கள் கொன்று விட்டாலும் கூட அதற்காக உங்களை தூக்கிலிட்டு கொன்றுவிட மாட்டார்கள். ரஷியாவில் கடுந்தண்டனைகளேகிடையாது.

ஆதலால் இம்மாதிரியான கொலைக்குற்றங்களுக்கு 4-அல்லது 5-வருஷ சாதாரண காவல் தண்டனையே விதிப்பார்கள். மற்றும் குற்றவாளிகளிடம் அவர்கள் வெகு சலுகை காட்டுவார்கள். இவைகளையெல்லாம் கேட்பதற்கு உங்களுக்கு இப்போது அதிசயமாய்த் தோன்றலாம்.

பொது உடமைக்கொள்கை என்ருல் என்ன? என்பதை நன்ருய் அறிந்தபிறகுதான், சோவியத் ஆட்சியாகிய குடிகளின் பஞ்சாயத்துஆட்சி நோக்கம் இன்னது என்று நன்ருய் அறியமுடியும். அதன் பிறகு அக்கொள்கைகள் அமெரிக்கா, சிக்காக்கோ, அல்லது பிட்ஸ்பரோ, அல்லது டிட்ரோய்ட் முதலிய இடங்களில் அதிசயிக்கும்படி பரவுவதும் உங்களுக்குத்தெரியும். ஒன்று, இரண்டு நாளில் அது தழைத்து ஓங்குவதும் விளங்கும்.

## ரஷியாவின் தோற்றம்.

இன்றைய தினம் உங்கள் கண்களுக்கு ரஷியா "இந்திரலோக" மாக இருக்கும் என்று எண்ணிவிடாதீர்கள். ரஷியா, உலகில் ஒரு பெரிய தேசம். அதை ஒழுங்குபடுத்தி

விடுவது என்பது சுலபமான காரியம் அல்ல. ஏனெனில் ஸார் சக்ரவர்த்தி காலத்தில் அத்தேசம் இருந்த ஏழ்மை நிலையையும், மக்களின் அறியாமையையும், காட்டுமிராண்டி நிலைமையையும் அறிந்தவர்கள், இந்த 11 வருஷ காலத்திற்குள் அவ்வளவு தூரம் தரித்திரத்தையும் அறியாமையையும் அடியோடு அந்நாட்டை விட்டு நீக்கிவிட முடியுமா? என்பதை யோசித்துப்பாருங்கள்.

ரஷியா, பெரிய தேசம்.

ரஷியா 80 லட்சம் சதுரமைல் விஸ்தீர்ணமுடைய பெரிய தேசம். அமெரிக்க ஐக்கிய நாட்டைவிட 40 லட்சம் சதுரமைல் பெரிய தேசம். அதாவது, அதைவிட இரட்டிப்பு மடங்குஅகண்ட தேசமாகும். ரஷியாவின் ஜனத்தொகை 16-கோடியாகும். அமெரிக்க ஜனத்தொகையைவிட 175 லட்சம் ஜனங்களதிகம். ஆதலால் அந்நாட்டில் இன்னமும்கூட பட்டினியும், அறியாமையும், அநாகரீகமும் இருக்கலாம். ஆனபோதிலும் மற்ற தேசத்தார்களைப்போல் ரஷியர்கள் தேசியம், தேசபக்தி என்னும் பெயரால் சுயநலத்தையும், பேராசையையும் பிரதானமாய்க்கொண்ட, மிருகத்தனமான யுத்த முறைக்கு ஆதரவளித்து, யுத்த முஸ்தீப்புகளை தயாரிப்பதற்காக நாட்டுச்செல்வங்களைப் பாழாக்கி, மக்களுக்கு துன்பத்தையும், தரித்திரக்கஷ்டத்தையும் உண்டாக்கி அதன் பயனுப் தொழிலாளிகளிடம் அதிக வேலை வாங்கவும், குறைந்த கூலி கொடுக்கவுமான கொடுமைகள் செய்யாமல் பொதுவுடமைக் கொள்கைகளை வெற்றி முரசுடன் நடத்திக்கொண்டும், நிலையாக முன்னேறிக்கொண்டும் இருப்பது நன்குய் விளங்கும்.

ஆனல் நீங்கள் ரஷ்யாவில் உள்ள கெடுதி என்ன என்பதைப் பார்க்க அவ்வளவு தூரம் போகவேண்டியதில்லை. உங்கள் நாட்டில் உள்ள கெடுதிகளேதான் அங்கும் இருக்கலாமேயொழிய, உங்கள் நாட்டில் இல்லாத கெடுதி ஒன்றும் அங்குகாண முடியாது, ஆகையால். அதற்காக, உங்கள் தேசத்தைவிட்டு ரஷியாபோகவேண்டியதில்லை.

மற்றபடி, நீங்கள் அமெரிக்காவின் பொருளாதார நிலை என்னும் கப்பலானது, உலகப் பொருளாதார நெருக்கடி என்னும் புயல் காற்றால் தாக்குண்டு, முழுகிப்போகும் நிலைமையில் இருக்கும் காலத்தில் ரஷியப் பொருளாதார நிலை என்னும் கப்பல் எவ்வித ஆட்டமும், அசைவும் இல்லாமல் சுகமே ரஷியக்கரை சேர்ந்திருக்கும் பெருமையின் காட்சியைப்பார்க்க வேண்டுமானால் நீங்கள் அங்கு செல்லுங்கள். உங்கள் நாட்டு மக்கள் அடைந்துவரும் கஷ்டங்களுக்குக் காரணம் உங்கள் தலைவர்களின் முட்டாள் தனமான நிர்வாகத்தினாலும், பொதுநலங்களை இழிவானதும் அயோக்கியத்தனமானதுமான சுயநலங்களுக்கு பயன்படுத்திக் கொண்டதாலும், ஒவ்வொருவரும் தாங்கள் மாத்திரம் மேன்மை அடைந்தால்போதும் என்று கருதிய அற்ப குணத்தாலும் ஏற்பட்ட கொடுமைகளை, இயற்கையாய் ஏற்பட்டது என்று கருதி இருக்கும் முட்டாள் தனத்தை விட்டுவிட்டு அங்குசெல்லுங்கள். ரஷியர்கள் இவ்வித கெட்ட குணங்களையும், பேராசை, சுயநலம், சோம்பேரி வாழ்க்கை ஆகிய இழிகுணங்களையும் விட்டவர்கள் என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஆகையால் அவைகளை எப்படி ஒழித்தார்கள் என்பதையும் நீங்கள் பார்க்க ஆசைப்படலாம்.

## உங்களாலும் செய்யக்கூடும்.

ரஷியர்களால் ஆகக்கூடிய காரியம் உங்களாலும் ஆகக்கூடும். நீங்கள் ஒரு சமயம் உங்களால் முடியாது என்றுஎண்ணலாம். ஆனால் கண்டிப்பாய் உங்களால் முடியும். சிறைக்குள் இருக்கும் ஒரு கைதி அதன் கதவுகள் திறந்து கிடப்பதை அறியாமல் ஜன்னல் கம்பிகளை தகரத்துண்டுகளால் அறுத்து வெளிவரமுயற்சித்துக் கொண்டிருப்பதுபோல் உங்கள் முயர்ச்சிஇருக்கிறது.

உங்கள் வாழ்நாள் முழுவதும் விடுதலை பெற உண்மையான வழியறியாமல் இப்படித்தான் அடைபட்டிருக்கக்கூடும். ஆனால் உங்கள்பிள்ளைகள் உங்களைப்போன்றே வகையறியா சோம்பேரிக

ளாக இல்லாமல், உலக விடுதலை நாகரிகப் போட்டியில் ரஷியர்களைவிட முன் செல்லக்கூடியவேக முடையவர்களாய் இருப்பார்கள் என்றே எதிர்பார்க்கின்றேன்.

உங்களுக்கு மேன்மை உண்டாகவேண்டுமென்று வாழ்த்தி, உங்களிடமிருந்து தற்காலம் விடைபெற்றுக்கொள்ளுகிறேன்.

---

புரட்சி வாழ்க !

பொதுவுடமை ஓங்குக !!

---

உண்மை விளக்கம் பிரஸ், ஈரோடு.

# ரஷியாவைப்பற்றி

## பர்னாட் ஷா.

தோழர் பெர்னாட்ஷாவிடம், "ஜான்புல்" என்ற ஓர் ஆங்கிலப் பத்திரிகை ஆசிரியர், ரஷியா, ஐந்து வருடத்திட்டத்தின் பயனும் அடைந்த ஏற்றத்தினால் பெரிதும் பாதிக்கப்பட்ட வல்லரசுகள் ரஷியாவினிடம் வலியச்சென்று நட்புரிமை செய்து கொள்ளுவது சிறப்புடையதா? அல்லது வியாபாரச் சிக்கனமுறை எனும் யோசனை அதை ஒழிக்க முயற்சிப்பது சிறப்புடமையா? என்று வினவியதற்கு தோழர் ஷா அளித்த மறுமொழி:—

வியாபார உலகினின்று முதலாளித்துவ அரசுகள் ரஷியாவை ஒதுக்கிவைத்தது பெரும் மடமைத்தானமாகும். ஐரோப்பிய பெரும் போரிற்குப் பின் தங்கள் சொந்த வியாபாரங்களைக் கூட செம்மையான முறையில் நடத்த முடியாமல் திணறுகின்றது, என்பதை இது நன்குணர்த்துகிறது. சமதர்ம ருஷியாவை முதலாளித்துவ அரசாங்கம் ஒதுக்கி வைத்ததானது அந்நாட்டிற்கு எதிர்பாராத நலனைக் கொடுத்தது.

ஏனென்றால் முதலாளித்துவ வல்லரசுகள் ருஷியாவோடு வியாபார ஒப்பந்தம் செய்திருப்பின் நிச்சயமாகவே அவைகள் வேலையில்லாத் திண்டாட்டம் என்னும் பெரும் நோயினின்று தப்பி ருஷியாவின் கைத்தொழிலைக்கவர்ந்திருக்கும். "சமதர்மம்" என்னும் மொழியைக் கேட்டதும் கிடுகிடென நடுங்கும். இம்முதலாளித்துவ அரசாங்கங்கள் ருஷியாவை ஒதுக்கி விட்டதால் அது பிறர் உதவியின்றித் தம் உடலையும், உயிரையும் உரம்பெறச் செய்து கொண்டது.

ஆகவே சோம்பல், மூடநம்பிக்கை, அடிமை எண்ணம் முதலிய தீக்குணங்கள் படிந்த ஸார் காலத்திய தீய ருஷியா இப்பொழுது

சுறுசுறுப்பு, தூய்மை, பகுத்தறிவு, சுதந்திரம், சாந்தி முதலிய அருங் குணம் பெற்ற சமதர்ம நோக்கமுள்ள, தன்னறிவு மிக்க நன்னாடாய் பொலிவுற்று விளங்குகின்றது.

கனவிலும் நனவிலும் நாடு பிடிப்பதிலே நாட்டம் கொண்டு வாழும் பேராசைபிடித்த கொள்ளைக்கார முதலாளித்துவ அரசாங்கங் கள் தாங்கள் பணவலி, படைவலி, முதலியபல வலியாலும் பிறநாடு களை கொள்ளையடித்தது போல் தங்களைப்போன்று எல்லா சாதனங் களையும் பெற்றிருக்கும் ருஷியா எப்போது தாங்கள் முன் செய்து வந்த வழியைப்பின் பற்றித்தங்களிடம் நடந்து விடுமோஎன்ற பயத் தால் நடு நடுங்குகின்றன.

தங்கள் உழைப்பின் பயனை தாங்களே அனுபவிக்கப் போகி றோம் என்ற எண்ணத்தின் பயனால் உண்டான ஊக்கத்தினால் ஐந்து வருடத்தில் வெற்றிபெற உழைத்த ரஷியா அதன்பலனாய் குறைந்த நேரம் வேலைசெய்து நிறைந்த ஊதியமடைந்தனர். தங்கள் முன்னோர் கள் நினைத்து மிராத கல்வியும் சரிசமத்துவ நிலையும் பெற்றிருப்ப தோடு, இன்னும் தாங்கள்வேலை செய்யவேண்டிய நேரத்தை குறைத் தும் அதனால் அதிக லாபத்தைப் பெறவும் எதிர்பார்க்கின்றனர். சிறிது காலத்தில் தம் வாழ்க்கையை துன்பமும் கவலையும் இல்லாத இன்ப வாழ்க்கையாய் மாற்றி விடலாம் என்று எண்ணுகின்றனர்.

இந்த நன்னிலை அமெரிக்காவிலோ, இங்கிலாந்திலோ உண்டா தல் அரிதினும் அரிது. ஏனென்றால் அங்கு கஷ்டப்பட்டுத் தொழி லாளர்கள் உழைத்துழைத்து வந்ததால் அதனால் அவர்கள் உடம்பி னின்று வரும் இரத்த வியர்வையில் முதலாளிகளாகிய சோம்பேறி கள் மூழ்கி கஷ்டமின்றி ஸ்நானம் செய்ய எண்ணுவார்களென்பதை யும் பிரதிபலனாகத் தங்கள் வீட்டுவாடகையை உயர்த்துவார் களென் பதையும் நன்குணர்வார்கள். தொழிலாளர்கள் இச்சோம்பேறிகட் குழைப்பதின் பலன் அவர்கட்கு ஆயுட்குறைவு என்பதைத் தவிர வேறு ஒன்றும் கிடையா.

வல்லரசுகள் ஐரோப்பியப் போரில் இயற்கை முயற்சியிலும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளப் போதிய வெடி குண்டு செய்தல் முதலிய செயற்கை முறையிலும் தம் திறமையின்மையை உலகிற்குக் காட்டிவிட்டன. "நாய் தான் கக்கிய உணவையே உண்ண முயலும்" "பன்றி மலத்தையே தின்ன விரும்பும்" அதுபோல் நாம் (முதலாளித்துவ அரசாங்கங்கள்) எப்பொழுதும் இழிவான லட்சியத்திலேயே கிடக்கின்றோம்.

சமதர்ம ருஷியாவின் ஐந்து வருடத் திட்டத்தின் வெற்றியும் பொதுவுடமையால் ருஷியாவிடுதலை பெற்றமையும் நாம் கற்க வேண்டிய இரண்டாம் படிப்பினையாகும். (முதலாளித்துவ ஆட்சியால் நாம் கண்ட முதற்படிப்பினை--ஐரோப்பியப் பெரும் போர் தான்.)

நாம் பிறரிடமிருந்து கற்க வேண்டியதொன்றுமில்லை யென்னும் பருவத்தையடைந்து விட்டோமா?

## ஷாவின் சொற்பொழிவு.

சுயேச்சைத் தொழிலாளர் கழகக் கோடை பாடசாலை முன்னிலையில் தோழர் "ஷா" செய்த சொற்பொழிவின் சாரம்:—

ருஷியா நரகாக்கினிக் காப்புப் பெற்ற (Hell fire proof) நன்னாடு. பணக்காரனும், பணக்காரியுமற்ற ஒரு நாட்டிற்கு (ருஷியாவிற்கு) நான் சென்றுமிகுந்த மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் அச்சமதர்ம நாட்டைவிட்டு இங்கு திரும்புங்கால் எனது கால்கள் நடுநடுங்கியது. (இவ்வாறு கூறும்போது அவர் கண்கள் களிப்பு மிகுதியால் ஜொலித்தன.)

என்றைக்காவது ஒருநாள் பொதுவுடமை ஆட்சி முறைந்தும் கட்டுப்பட்டு அதன் திட்டங்களை நிறைவேற்ற சர்வாதிகார (Dictatorship) என்னும் முறையை கிரேட்பிரிட்டனும் தழுவித்தான் ஆக வேண்டும். நமது பிரிட்டிஷ் ஜனநாயக ஆட்சிமுறை

(Democracy) யாதொரு பயனுமளிக்கப்போவதில்லை. நாம் முட்டாள்களாய் இருக்கிறோம் என்பதை ருஷியர்கள் நம்ப மறுக்கி றார்கள். அறிவாளிகளான பிரிட்டிஷார்களுக்கு இந்தமுறை, (இச் சட்டம்) தெரியாதிருக்குமா என்று தோழர் ஸ்டாலின் எம்மிடம் கூறினார். எங்கள் மக்கள் அறிவிலிகள் என்பதை நீர் முதன் முத லில் உணர்ந்து கொள்ள வேண்டுமென்று நான் மொழிந்தேன். பொது உடமைக்கொள்கையின் நலனை அறியாமக்கள் உலகிலிருக் கிறார்கள் என்று தோழர் ஸ்டாலின் கருதவேயில்லை. ருஷிய பொது உடமை அரசியலின் நிபுணர்கள் பரந்த நோக்கும் சிறந்த அறிவு முடையவர்களாயிருக்கின்றனர். மார்க்ஸ் நூற்களை நன்கு பயின்றி ருக்கின்றனர்.

தோழர் ஸ்டாலின் என்னை நோக்கி, (முதலாளித்துவ முடை யோர்கள்) எங்களைப் பேடிகளென்கின்றனர். ஆனால் அனுபவத் தில் நாங்கள் அதற்கு மாற்றமாய் இருக்கின்றோம். என்று கூறி னார். நான் தோழர் ஸ்டாலினிடம்பேசியபோது, முதலாளித்வ அர சாங்கம் ருஷ்யாவோடு போரிட முயற்சிக்கிறதாக ருஷ்ய மக்கள் எண்ணுவதாக அறிகிறேன்.

ஆனால் "ஒன்றுக்கும் அஞ்சாத" எங்கள் அரசாங்கம் போர் புரிய முன்வர மாட்டார்கள் என்று கூற என்னால் முடியாது என் றாலும், மற்ற நாட்டு பொது ஜனங்கள் போர் புரிய விரும்பவில்லை" என்றேன். அதற்கு அவர் ஆனால் பொது மக்களால் இது காறும் சர்ச்சில் போன்ற போர் வெறியர்களால் நினைத்த பொழுதெல்லாம் போரிடுவதைத் தடுக்கமுடியவில்லையே என்றார். உடனே யான் ஆம் உண்மை தான், தற்போது பேராபத்து ஒன்று மில்லை என் றாலும் வீரர் க்ரோம்வேல் கூறியபடி "கடவுளை நம்புங்கள் இருந் தாலும் துப்பாக்கி மருந்தை தயாராய் வைத்திருங்கள்" என்று நான் உங்கட்கு கூறுகிறேன் என்றேன். தோழர் ஸ்டாலின் "ஆம் நாங் களும் அப்படியேதான் தயாராய்த்தான் இருக்கிறோம்" என்றார்.

## ருஷ்ய சட்ட சபை.

சட்ட சபை என்னும் வெறும் பிரசங்க மேடை ருஷ்யாவில் கிடையா. ஒரு வேலையைச்செய்து முடிக்க வேண்டுமாயின் அவ்வேலைக்குரிய டிபார்ட்மெண்டின் தலைமை அதிகாரி கட்டளை போடுகின்ருர். அவரே அதற்குப் பொறுப்பாளியாயுமிருக்கின்ருர். அவர், தவறுதலாக நடந்தால் அவர்பாடு மிகச் சங்கடமே. அவர்கள் போக்கு இத்தாலியர் போக்காகத்தான் இருக்கிறது. தோழர் ஸ்டாலின் இதைக் கேட்டால் நகைப்பார் என்று எண்ணுகிறேன். ருஷ்யாவின் மாறுதல்கள் யாவும் நிறைவாகவும் அழகாகவும் பொலிந்து விளங்குகின்றன. ருஷ்ய ஆட்சி முறையென்னும் இயந்திர சக்கரத்தின் அச்சுகளில் எண்ணெய் இருக்கிறது. ஆனல் நமது அரசாங்கம் எனும் இயந்திரத்தின் சக்கரங்களின் மணல் நிறைந்திருக்கிறது. அதனுற்ருன் ருஷ்ய அரசாங்க இயந்திரத் நேர்செம்மையாய்த் தடைப்படாது ஓடுகின்றது.

## ருஷ்ய திட்டம்.

ருஷ்யத் தொழிலாளர்களை விழித்துத்"தோள் கொடுத்துஉழையுங்கள்" ஒழியினும் ஒழிந்து போங்கள். பசியால் வாடினும் வாடுங்கள் ஆனல் ஐந்து வருடத் திட்டம் முடிவு வரை கஷ்டப்படுங்கள்" என்று பொது உடமை அரசாங்கம் கூறுகின்றது. ருஷ்யர்கள் பட்டினி யென்ருல் இன்னதென்று உணரார்கள், ஆனல் ஆடம்பர உணவு அவர்கட்கு கிடையாது. இதை பிரிட்டிஷ் தொழிலாளர்கட்கு கூறினல் நாங்கள் என் ஐந்தாண்டு கஷ்டப்பட்டு வயிற்றையும் வாயையும் கட்டி உழைத்து பணக்காரர்கள் கொழுப்பேறும்படி செய்ய வேண்டும்? என்பர். எங்கள் கொள்கை, குறைய உழைப்பதும் நிறைய பணம் பெறுவதுந்தான் என்பார்கள். எனவே பணக்காரர்கள்-முதலாளிகளற்ற ருஷியா, நாளுக்கு நாள் நன்னிலை யெய்தி வருவதில் எவரும் ஆச்சரியப்பட வழியில்லை. தொழில்களை அரித்துத் தின்னும் புழுக்களையும், புழுக்களைத் தின்னும் புழுக்களையும்

(முதலாளிகளையும் லேவா தேவி பாங்கிக்காரர்களையும்) ருஷியர்கள் அழித்து விட்டனர்.

மதமா?

என்னுடன் போந்திருந்த சீமாட்டியாகிய ஆஸ்டர், ஸ்டாலினை நோக்கி "உங்கட்கு சமயம் வேண்டாமா? மதமின்றி மக்கள் எப்படி உயிர்வாழ முடியும்?" என்ருர். அதற்கு நான், "ருஷியர்கட்கு மீண்டும் மதம் வேண்டாம். ருஷியர்கள் மதத்தால் நிறைந்திருக்கின்ருர்கள். ருஷியப் புரட்சியே ஆன்மஉணர்ச்சியோடு கூடிய ஓர் இயக்கம்" (மதம்) என்று மொழிந்தேன்.

ருஷியாவில் குழந்தைகளை எவரும் அடிப்பதில்லை. பெற்ருேர்களாயினும் குழந்தைகளை அடிப்பராயின் உடனே வழக்குத் தொடரப்படும். அஃதோர் தண்டனைக்குரிய பெரும் குற்றமாகக் கருதப் படுகிறது.

அங்கு மரண தண்டனை கிடையாது. ஒருவன் கொலை செய்வானேயாஞல் ஐந்து ஆண்டுகள் தான் தண்டிக்கப்படுவான். ஆனுல் எவனுவது தனித்த முறையில் வியாபாரம் (சூதாட்டம்) செய்து பணக்காரஞக எண்ணிஞனயின் அவன் "பரலோக" பிராப்தி அடைவது (தூக்கிலிடப்படுவது) திண்ணம்.

பணப்பேய் பிடித்த வியாபாரிகளை நாம் இங்கு (இங்கிலாந்தில்) பாராளுமன்ற உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கின்ருேம். அவர்களைப் புகழுகின்ருேம், வணங்குகின்ருேம்.

இன்றில்லா விட்டாலும் என்ருளாவது ஓர் நாள்ருஷிய அரசியல் முறையை பிரிட்டன் கடைப்பிடித்தேயாக வேண்டும். அப் பொழுது அதை யோர் சர்வாதிகாரி நின்று நடத்துதல் வேண்டும். அப்பொழுது தான் நாம் ஊக்கமுடன் வேலை செய்ய முடியும்.

——:0:——

# குடி அரசு பதிப்பக வெளியீடுகள்.

——:0:——

| | | |
|---|---|---|
| 1. | கைவல்யம் அல்லது கலைக்கியானம். | 0—8—0 |
| 2. | இராமாயண ஆராய்ச்சி, | |
| | முதற்பாகம் பாலகாண்டம் | 0—4—0 |
| | இரண்டாம்பாகம் அயோத்தியா காண்டம். | 0—8—0 |
| 3. | ஞான சூரியன். | 0—4—0 |
| 4. | மநுநீதி மருமம். | 0—2—0 |
| 5. | இராமலிங்க சுவாமிகள் பாடல் திரட்டு | 0—2—0 |
| 6. | சுயமரியாதைத் தாலாட்டு. | 0—2—0 |
| 7. | சோதிடப் புரட்டு. | 0—2—0 |
| 8. | ஈ. வெ. இராமசாமியின் சீர்திருத்த மகாநாட்டின் சொற்பொழிவு. | 0—2—0 |
| 9. | சுயமரியாதைப்பாடல். | 0—2—0 |
| 10. | தர்ம பரிக்ஷை அல்லது புராண ஆபாசம் | 0—3—0 |
| 11. | பங்கஜம் அல்லது பார்ப்பனக்கொடுமை. | 0—4—0 |
| 12. | மேயோ கூற்று மெய்யா? பொய்யா? | 0—3—0 |
| 13 | அகத்தியர் ஆராய்ச்சி. | 0—2—0 |
| 14 | கடவுளை நிந்திக்கும் கயவர்கள் யார்? | 0—2—0 |
| 15 | கதர்-மூடநம்பிக்கை [இங்கிலீஷ்] | 0—2—0 |
| 16 | கடவுளும் பிரபஞ்சமும். | 0—4—0 |
| 17 | இந்தியாவின் குறைபாடுகள். | 0—8—0 |
| 18 | இராமசாமியின் லங்கைசொற்பொழிவு | 0—0—6 |
| 19 | சத்தியாக்கிரகமா? சண்டித்தனமா? | 0—0—3 |
| 20 | ஆஸ்திக நாஸ்திக சம்வாதம். | 0—6—0 |

மானேஜர்,

குடி அரசு புத்தகாலயம், ஈரோடு.